


# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

தனி பிரதி-ரூ. 10/-

மலர் - 1 அக்டோபர் - டிசம்பர் - 2017 இதழ் - 4



அவள் ஒரு குமாரனைப் பெறுவாள்,
அவருக்கு இயேசு என்று
பெயரிடுவாயாக ஏனெனில் அவர்
தமது ஜனங்களின் பாவங்களை
நீக்கி அவர்களை இரட்சிப்பார்
என்றான். (மத். 1:21)

# தொழுநோயாளிகளின் குழந்தைகள் இல்லம்

ஆந்திர மாநிலத்தில் இந்த இல்லம் 34 குழந்தைகளுடன் செயல்பட்டு வருகிறது. இவர்களின் பெற்றோர் தொழுநோயாளிகள் ஆனபடியினால் அவர்களால் வேலை செய்து இக்குழந்தைகளின் அடிப்படை தேவைகளான உணவு மற்றும் உடை போன்றவைகளை சந்திக்க இயலவில்லை. பள்ளிச் செல்லும் நாட்களில் மட்டும் இக்குழந்தைகளுக்கு பள்ளியில் மதிய உணவு வழங்கப்படுகிறது. ஆகவே இக்குழந்தைகள் காலையிலும் இரவிலும் உணவு கிடைக்காமல் பசியால் அல்லல் படுகின்றனர். இக்குழந்தைகளின் பரிதாப நிலையைக் கண்ட இக்கிராம மிஷனெரி மற்றும் சபையார் இக்குழந்தைகளுக்கு காலையிலும் இரவிலும் தங்களால் இயன்ற அளவு உணவு சமைத்து கொடுத்து உதவுகின்றனர். இருப்பினும் இந்த ஏழை சபையால் குழந்தைகளுக்கனா உணவு தேவைகளை தினமும் சந்திக்க இயலாமல் சிரமப்படுகின்றனர். இந்த ஏழை குழந்தைகளுக்காக உதவும் இந்த சபையுடன் இணைந்து நீங்களும் உதவலாம். இக்குழந்தைகளுக்காய் உங்கள் தனி, குழு, சபை மற்றும் குடும்ப ஜெபங்களில் ஜெபிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

ஒரு குழந்தைக்கான மாத உணவு தேவை ரூ. 500/–

இக்குழந்தைகளை சந்திக்க மற்றும் உதவ விரும்புபவர்கள் தொடர்பு கொள்ளவேண்டிய எண்: 9443155120



## மிஷனரிகளுக்கு மருத்துவ உதவி செய்தல்



Address:-
Newhope Mission
75/33, Isaac Street,
Nagercoil - 629001

மிஷனரி பணிக்களங்களில் பணியாற்றும் பணியாளர்கள் தேவ ராஜ்யத்தின் மகிமையான பணியை செய்து வருகின்றனர். அவ்வாறு பணியாற்றும்போது மிஷனரிகள் சந்திக்கும் இன்னல்கள், இடர்பாடுகள் ஏராளம் ஏராளம். இத்தனை இடர்களுடன் சில மிஷனரிகள் உடல் ஆரோக்கியம் சார்ந்த பல்வேறு நோய் நொடிகளுக்கு ஆளாகின்றனர். அவ்வித நோய்கள் தாக்கும்போது சில மிஷனரிகள் உரிய சிகிட்சைக்கான நிதி வசதியின்றி தவித்து வருகின்றனர்.

இவ்வித இக்கட்டான வேளைகளில் மிஷனரிகளின் சிறந்த மருத்துவ சிகிட்சைக்கு புதுநம்பிக்கை மிஷன் உதவி செய்து வருகிறது. ஏழை மிஷனரிகள் மருத்துவ சிகிட்சைக்கு கருத்துடன் ஜெபிப்போம். உதவ முன்வருவோம்.

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ள: 9442935233

# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 1 அக்டோபர் - டிசம்பர் - 2017 இதழ் - 4


## உள்ளே . . .


*1. இயக்குநர் கடிதம் ............ 1*

*2. இறை தூது ................. 2*

*3. வேத ஆய்வு ................. 8*

*4. இளைஞர் பகுதி ........... 12*

*5. மருத்துவ குறிப்பு .......... 13*

*6. பெண்கள் பகுதி ............ 14*

*7. ஜெப குறிப்பு ................ 16*

*8. வேதாகம போட்டி ......... 16*



ஆசிரியர்

S. மோசஸ் ராஜ் – 7502071054

ஆசிரியர் குழு

C. பால் வென்னட் சிங் –9442315120

ஆ. ரவி குமார் – 9442935233

S. வசந்த நேசம் – 9789183072

D.V. பிபின் சஜீவ் – 9443018392

A. சுதா ஏசாயா – 9486083188

முகவரி :

**புது நம்பிக்கை**

75/33, ஐசக் தெரு,

நாகர்கோவில் – 629 001



தனி பிரதி. 10/–

ஆண்டு சந்தா. 100/–

ஆயுள் சந்தா. 2000/–

தனி சுற்றுக்கு மட்டும்


**இயக்குநர் மடல்!**

*கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!*

*இயேசுவின் இனிய நாமத்தில்*

*அன்பின் வாழ்த்துக்கள்.*

ஆண்டவருடைய மட்டற்ற கிருபையால் நமது ஊழியங்கள் சிறப்பாக வளர்ந்து வருகிறது. தற்போது நமது ஊழிய பணிக்களங்கள் 10 மாநிலங்களில் பரந்துள்ளது. இப்பணிக்களங்களில் பணி செய்யும் சில மிஷனெரி பணிக்களங்களை பார்வையிட்டு, மிஷனெரிகளையும் சபை மக்களையும் உற்சாகப்படுத்த தேவன் கிருபை செய்தார். மிஷனெரிகள் படும் சிரமங்களில் கர்த்தர் அவர்களோடிருந்து பாதுகாத்து வருகிறார். நாமும் அவர்களை ஜெபத்தில் தொடர்ந்து தாங்குவோமாக!

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து நமது பாவங்களிலிருந்தும், அடிமைத்தனத்திலிருந்தும் மீட்கும்படி பிறந்தார். அவரது பிறப்பை டிசம்பர் மாதத்தில் நாம் கொண்டாடி மகிழ்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால் இந்த கிறிஸ்மஸ் காலத்தில் சில மிஷனெரி குடும்பங்களுக்கு கிறிஸ்மஸ் சிறப்பு பரிசுகள் வழங்கவும், புத்தாடைகள் வழங்கவும் திட்டமிட்டு அதற்காக ஜெபத்துடன் முயற்சி செய்து வருகிறோம். கர்த்தரின் தோட்டத்தில் பணிபுரியும் ஒரு மிஷனெரி பிள்ளைக்கு நாம் குடும்பமாக ஒரு புத்தாடை வழங்க முன்வருவோமாக! மிஷனெரி குடும்ப வாழ்விலும் மகிழ்ச்சியை இப்பண்டிகை காலங்களில் கொண்டு வரும்.

கர்த்தரும் இப்பண்டிகை காலங்களை நம் அனைவரின் வாழ்விலும் குடும்பத்திலும் ஆசீர்வதித்து தருவாராக!

இனிய கிறிஸ்து பிறப்பு நல் வாழ்த்துக்கள்!

கிறிஸ்துவின் பணியில், சகோ. ஆ. ரவி குமார்

# கிறிஸ்துமஸ் செய்தி

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே!

கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் உங்களுக்கு வணக்கத்தையும் கிறிஸ்துமஸ் நல்வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்வதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

இந்த உலகத்தில் பிறக்கும் ஒவ்வொரு மனிதனுக்கும் தேவன் ஒவ்வொரு திட்டத்தை வைத்துள்ளார். (எபே.5:17) அந்த திட்டம் என்னவென்று அறிந்து, நாம் செயலாற்றுவது நமது கடமை. அதே போல் தான், இயேசு கிறிஸ்துவின் பிறப்பிற்கு ஒரு திட்டம் இருந்தது. அந்த திட்டத்தை இயேசு அறிந்திருந்தார். அதை நிறைவேற்றினார்.

**இயேசு எதற்காக உலகத்திற்கு வந்தார்?**

இழந்து போனதை தேடவும், அதை இரட்சிக்கவுமே மனுஷகுமாரன் உலகிற்கு வந்தார். இயேசு : பாவிகளையே மனந்திரும்புவதற்கு அழைக்க வந்தேன். (மத்.9:13)

**எதை யார் இழந்தார்கள்?**

ஆதியிலே ஆதாம் பாவம் செய்தபடியால் ''ஆளக்கடவர்கள்'' (ஆதி.1:26), ''ஆண்டு கொள்ளுங்கள்'' (ஆதி. 1:28) என்கிற ஆளும் அதிகாரத்தை இழந்தான்.

தேவனுக்கும் மனிதனுக்கும் இருந்த நேரடி தொடர்பை இழந்தான். (ஆதி.3:23)

தேவன் மனிதனை இழந்தார். தேவன் முதலில் ஆதாமை படைத்தபோது ''மனிதருக்குரிய'' குணாதிசயங்களோடு படைத்தார். ஆனால் பாவம் செய்தபோது, ''மனிதத்தன்மையை'' இழந்து பாவம் செய்த ஆதாம் என்கிற ''பாவியின்'' தன்மைக்கு மாறினான். எனவே இந்த உலகில் வாழும் மக்களுக்கு உண்மையான ''மனிதத்தன்மை'' என்பது என்ன என்று காண்பிப்பதற்கு தேவன் ''இரண்டாம் மனிதனாக'' (1 கொரி. 15:4) பிறந்தார்.

தேவன் பரிசுத்தர். மனிதன் பாவம் செய்தபடியால் தேவனுக்கும், மனிதனுக்கும் இருந்த உறவு துண்டிக்கப்பட்டது. எப்படியெனில், ஆதாம் ஆவிக்குரிய மரணம் அடைந்து விட்டான். (ஆதாம் பாவம் செய்தபோது) (ஆதி. 2:17) அதாவது, மரணம் என்பது தொடர்பு அற்றுப் போதல். இப்படி துண்டிக்கப்பட்ட உறவை மீண்டும் ஏற்படுத்துவதற்காக, தேவன் இயேசுவை இந்த உலகத்திற்கு அனுப்பினார்.

ஆகவே மனிதன் இழந்ததை மீண்டும் மனிதன் பெறுவதற்காகவும், தேவன் இழந்த ''மனிதனோடு இருந்த உறவை'' மீண்டும் தேவன் ஏற்படுத்துவதற்காகவும் இயேசு கிறிஸ்து உலகத்திற்கு வந்தார்.

## இயேசு கிறிஸ்துவின் பிறப்பும் மரியாளின் சமர்ப்பணமும்

இயேசு கிறிஸ்து ஸ்திரீயின் வித்தாக பிறக்க வேண்டியது தேவனுடைய திட்டம் (ஆதி.3:15) ஆகவே. இயேசுவை கர்ப்பமாக தரிப்பதற்கு தன் கர்ப்பப்பையை சமர்ப்பிக்கும் புருஷனை அறியாத ஒரு ஸ்திரீ தேவைப்படுகிறாள். தேவனுடைய திட்டம் நிறைவேற ஒரு பெண் பரிசுத்த ஆவியானவர் நிழலாடுவதை தன்மீது ஏற்றுக்கொள்ளும் (லூக்.1:35) ஒரு ஸ்திரீ தேவைப்படுகிறாள்.

இப்போது, மரியாள் தன்னை தேவனுடைய திட்டம் நிறைவேற சமர்ப்பிக்கிறாள். பரிசுத்த ஆவி உன் மேல் வரும். உன்னதமானவருடைய பலம் உன்மேல் நிழலிடும். ஆதலால் உன்னிடத்தில் பிறக்கும் பரிசுத்தமுள்ளது தேவனுடைய குமாரன் எனப்படும். என்று தேவதூதன் மரியாளிடம சொன்னவுடன் மரியாள் இதோ, நான் ஆண்டவருக்கு அடிமை, உம்முடைய வார்த்தையின்படி எனக்கு ஆகக்கடவது என்றாள். (லூக். 1:38) ஆகவே மரியாளின் சமர்ப்பணம், தேவனுடைய திட்டம் நிறைவேற ஏதுவாயிருந்தது.

## கிறிஸ்துவின் பிறப்பு

ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது, அந்த வார்த்தை மாம்சமாகியது. (யோவா.1:1,14) ஆகவே, ஆதியிலே இருந்த தேவனுடைய வார்த்தை மாம்சமாக இயேசுவாக மாறியது. தேவனுடைய வார்த்தை, தேவனுடைய தன்மையில் இருக்கும். தேவன் ஆவியாயிருக்கிறார். (யோவா.4:24). எனவே தேவனுடைய வார்த்தை உன்னதத்தில் (ஆன்மீக உலகம் – Spiritual realm) இருக்கும். இயேசு கிறிஸ்து இவ்வுலகில் (Material world) பிறந்தார். அதாவது பரலோகில் (Spiritual realm –ல்) உள்ள தேவனுடைய வார்த்தை உலகில் (Material realm – ல்) இயேசு கிறிஸ்துவாக பிறந்தார். இது எப்படி சாத்தியமாகும் ? பரலோகில் (Spiritual realm –ல்) உள்ளது எப்படி உலகில் (Material realm – ல்) பிறக்க முடியும் ? இது பரிசுத்த ஆவியானவர் மூலம் சாத்தியமாகும். பரிசுத்தஆவியானவர் பரலோகில் (Spiritual realm –ல்) உள்ள தேவனுடைய வார்த்தையை (LOGOS) உலகில் (Material world – ல்) பிறந்த இயேசு கிறிஸ்துவாக அவதரிக்க செய்தார்.

ஆனால் அப்படி மாறுவதற்கு மரியாளின் கர்ப்பப்பை தேவைப்படுகிறது. ஆகவே தேவனுடைய திட்டம் நிறைவேற மனிதனை அவர் பயன்படுத்துகிறார். இயேசு கிறிஸ்து என்னும் இரண்டாம் ஆதாம் பிறப்பதற்கு, ஒரு புது சிருஷ்டி உருவாவதற்கு தேவனுடைய வார்த்தை, பரிசுத்த ஆவியானவர், மனிதனுடைய ஒத்துழைப்பு (கர்ப்பப்பை) ஆகிய மூன்றும் தேவைப்படுகிறது.

இதே தத்துவம்தான் பாவியாகிய ஒரு மனிதனை புது சிருஷ்டியாக மாற்றுகிறது.

இரட்சிப்புக்கேற்ற தேவனுடைய வசனங்களை கேட்க வேண்டும். விசுவாசிக்க வேண்டும். அப்பொழுது நாம் புது சிருஷ்டியாக மாறுகிறோம். பரிசுத்த ஆவியினுடைய புதிதாக்குலினால் நம்மை இரட்சித்தார். ( தீத்து 3:5, 2 தெச.2:13, 2தீமோ. 3:15, ரோமர் 10:17, கலா. 6:15)

ஆகவே, நம்முடைய இருதயம் என்கிற கர்ப்பப்பையை தேவனுக்கென்று சமர்ப்பிக்கின்றபொழுது, தேவனுடைய வசனத்தை இருதயத்தில் ஏற்றுக்கொள்ளும்போது நாம் புது சிருஷ்டியாக மாறுகிறோம்.

## இயேசுகிறிஸ்து யாருக்காக பிறந்தார் ?

எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் பொருட்டு (இயேசு கிறிஸ்து) பிறந்தார். (லூக்.2:10)

அதாவது, ஒரு குறிப்பிட்ட நாட்டினருக்காகவோ, அல்லது இனத்தவருக்காகவோ பிறக்கவில்லை. மாறாக, எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் பொருட்டு இயேசு கிறிஸ்து பிறந்தார். அப்படியானால் தேவன், மனிதர்கள் எல்லோரும் சந்தோஷமாக இருப்பதையே விரும்புகிறார். துன்பம், துக்கம், வேதனை, இல்லாமை, நோய் போன்றவற்றோடு மனிதன் இருப்பதை தேவன் விரும்பவில்லை. கர்த்தருக்குள் எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள், சந்தோஷமாயிருங்கள் என்று மறுபடியும் சொல்லுகிறேன் (பிலி.4:4) என்று பவுல் பிலிப்பி பட்டணத்திலுள்ள கிறிஸ்து இயேசுவுக்குள்ளான அனைவருக்கும் எழுதின நிருபத்தில் எழுதுகிறார். ஆகவே நாம் சந்தோசமாக இருப்பதற்காகவே தேவன் இயேசு கிறிஸ்துவை அனுப்பினார்.

கர்த்தருக்குள் மகிழ்ச்சியாயிருப்பதே உங்களுடைய பெலன் (நெகே.8:10). ஆகவே நம்முடைய பெலன் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாயிருப்பதுதான். ஏனெனில் நமது மனவிருப்பத்தின்படி நமக்கு தேவன் தந்திருக்கிறார். நமது ஆலோசனைகளை எல்லாம் நிறைவேற்றுகிறார். ஏனெனில் நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டிருக்கிறார். எனவே, நாம் அவர் நாமத்தில் மகிழ்ந்து கொண்டாடுவோம்.

கிறிஸ்து பிறப்பு என்பது ஒரு நற்செய்தி (லூக்.2:10) இது ஒரு சந்தோஷத்தின் செய்தி. மனித குலம் தண்டனையிலிருந்து விடுபடுகிறது என்கிற நற்செய்தி கிறிஸ்து பிறப்பின் மூலம் நமக்கு கிடைக்கிறது. நித்திய மரணத்திலிருந்து மீட்பு என்கிற நற்செய்தி.

## கிறிஸ்து பிறந்ததினால் உண்டானவை

உன்னதத்திலிருக்கிற தேவனுக்கு மகிமையும், பூமியிலே சமாதானமும், மனுஷர்மேல் பிரியமும் உண்டாவதாக என்று சொல்லி துதித்தார்கள் (லூக்.2:14)

இங்கு மூன்று காரியங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. ஒன்று ‘‘உன்னதத்திலிருக்கிற தேவனுக்கு மகிமை உண்டாவதாக’’ என்பது தேவனுக்கு மகிமை நாம் செலுத்த வேண்டும். இது நம் கடமை. நம்முடைய சொல்லும் செயலும் தேவனுக்கு முன்பாக மகிமையுடையதாய் தேவனுக்கு மகிமை செலுத்துவதாய் காணப்படவேண்டும். தேவன் மோசேயிடம் கன்மலையைப் பார்த்து பேசு என்று சொன்னார். (எண்.20:8) ஆனால் மோசே கன்மலையை தன் கோலினால் 2 முறை அடித்தார். (எண். 20:11) இச் செயல் தேவனை மகிமைப்படுத்தவில்லை. எனவே மோசே கானான் தேசத்துக்குள் செல்ல முடியாத நிலை ஏற்பட்டது.

ஆனால் இயேசுவின் பிறப்பு தேவனை மகிமைப்படுத்தும் விதமாக இருந்தது. ஏனெனில், இயேசு தேவனின் சித்தத்தின்படி பிறந்தார். இயேசு இந்த பூமியில் செய்தது எல்லாம் தேவனிடத்தில் காணப்பட்டது ஆகும். தேவனுடைய சித்தம் இல்லாமல் இயேசு தானாக எதையும் செய்யவும் இல்லை. பிதா, இயேசுவுக்கு போதித்தபடியே இயேசு செய்தார். பிதாவுக்கு பிரியமானவைகளை இயேசு எப்பொழுதும் செய்தார் (யோவான் 8:28,29) இயேசு தனக்கு மகிமை தேடாமல் (யோவா. 9:50) தேவனை மகிமைப்படுத்தினார். ஆகவே. நாமும் தேவனை மகிமைப்படுத்துவோம்.

இரண்டாவதாக ‘‘பூமியிலே சமாதானம் உண்டாவதாக’’ அப்படியெனில், கிறிஸ்து பிறப்பதற்கு முன் பூமியிலே சமாதானம் இல்லையென்று தானே அர்த்தம். உலகப் பிரகாரமான சமாதானம் அல்ல; உலகம் கொடுக்க முடியாத சமாதானத்தை நமக்கு கொடுக்கும்படி இயேசு உலகில் பிறந்தார். இன்று மனிதர்கள் அங்கும் இங்குமாக சமாதானத்தை தேடி ஓடுகிறார்கள். ஏன் உலக நாடுகளே சமாதானம் உண்டாவதற்கு முயற்சி எடுக்கிறது. ஆனால், நாளுக்கு நாள் சமாதான குறைவுதான் ஏற்படுகிறதே தவிர சமாதானம் உண்டாகவில்லை. தனிப்பட்ட வாழ்க்கையில் சமாதானம் இல்லை. சகோதரருக்குள்ளே சமாதானம் இல்லை. பணிபுரியும் இடங்களில் சமாதானத்தோடு பணிபுரிய முடியவில்லை. நாட்டில் சமாதானம் இல்லை. இரு நாடுகளுக்கிடையே சமாதானம் இல்லை. ஆனால். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டவர்களுக்கு சமாதானம் உண்டு. ஏனெனில், நமது இயேசு சமாதான பிரபு (ஏசாயா 9:6). சமாதானத்தைக் கூறி, நற்காரியங்களை சுவிசேஷமாய் அறிவித்து, இரட்சிப்பை பிரசித்திப்படுத்துகிற சுவிசேசனுடைய பாதங்கள் மலைகளின்மேல் அழகாயிருக்கும் (ஏசாயா 52:7). சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை இயேசுவின் மேல் விழுந்தது என்று வேதம் சொல்லுகிறது. அத்தகைய தெய்வீக சமாதானத்தை நாம் பெறுவோம்.

மூன்றாவதாக ‘‘மனுஷர்மேல் பிரியம் உண்டாவதாக’’ என்று சொல்லி தேவதூதர்கள் தேவனை துதித்தார்கள். மனிதர் ஒவ்வொருவரும் மற்றவர்கள் மீது பிரியமாயிருக்க வேண்டும். பிறர் செய்கிற தப்பிதங்களைப் பாராமல், பிறருடைய நற்கிரியை மட்டும் நாம் கண்காணிக்கிறவர்களாயிருக்க

வேண்டும். மற்றவர்களை நாம் குற்றவாளிகள் என்று தீர்க்கக்கூடாது (மத்.7:1) ஏனெனில் நாம் பிறரை குற்றவாளி என்று தீர்த்தால் நாமும் குற்றவாளி என்று அந்த தீர்ப்பின்படி தீர்க்கப்படுவோம். எனவே, நாம் குற்றவாளிகளென்று தீர்க்கப்படாதபடிக்கு, மற்றவர்களை குற்றவாளிகளென்று தீர்க்கக்கூடாது. பிறரை நாம் அன்பு செய்யவும், பிரியத்துடன் காணவும் செய்வோம்.

ஆகவே, இந்த கிறிஸ்மஸ் நன்னாளில் கிறிஸ்து உலகில் வந்த நோக்கத்தை இயேசு நிறைவேற்றினது போல நாமும் நம்முடைய பிறப்பின் நோக்கத்தை அறிந்து இயேசு கிறிஸ்துவை முன்மாதிரியாகக் கொண்டு கிறிஸ்துவின் மதிப்பீடுகளை நம்வாழ்வில் கடைபிடித்து உலகத்திற்கு வெளிச்சமாகவும், பூமிக்கு உப்பாகவும் காணப்படுவோம். கர்த்தர் தாமே நம்மை ஆசீர்வதிப்பாராக. ஆமென். **–சகோ. மோசஸ் ஜஸ்டஸ்**

---

## படக்காட்சி ஊழியம்

தெலுங்கானா மாநிலத்தில் படக்காட்சி மூலம் டி.எம்.எம்.எஸ். குழுவினர் பணி செய்துவருகின்றனர். இப்பணிகளை மேலும் சிறப்புடன் செய்யவும், மின்சாரம் இல்லாத கிராமங்களில் படக்காட்சி காட்டவும் ஒரு ஜெனரேட்டர் தேவைப்படுகிறது. இத்துடன் ஒரு ஒலிப்பெருக்கி கருவியும் தேவைப்படுகிறது. இதற்கான மொத்த தேவை ரூபாய் ஒரு இலட்சம் ஆகும். இதற்காக ஜெபித்துக்கொள்ளவும்.

விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்– **9442935233**

---



## கிறிஸ்துமஸ் பரிசு

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!

தாங்கள் யாவரும் நமது மிஷனெரிகளுக்கு பல்வேறு வழிகளில் உதவி செய்து வருவதற்காக தேவாதி தேவனை ஸ்தோத்தரிக்கிறோம். இப்பண்டிகை காலங்களில் நீங்கள் தனியாகவோ, குடும்பமாகவோ, சபையாகவோ மிஷனெரிகளுக்கு பரிசுகள் வழங்கி மகிழ "புதுநம்பிக்கை" ஒரு பொன்னான வாய்ப்பை உங்களுக்கு வழங்குகிறது. உங்கள் பரிசை புத்தாடையாக அல்லது ரொக்கமாக மிஷனெரிகள் அல்லது மிஷனெரி பிள்ளைகளுக்கு வழங்கலாம். இதன்மூலம் நீங்களும் மகிழ்ச்சியடைவதுடன் ஒரு மிஷனெரி குடும்பத்தையும் மகிழ செய்கிறீர்கள். கர்த்தரின் வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களையும் பெறுவீர்கள்.

தொடர்பு கொள்ளவும் : **9442935233, 9443155120**



# மிஷனெரி அறிமுகம்

பணிக்களம்: சிர்டி நகர்

மாநிலம் : கர்நாடகம்

மிஷனெரி : ஜெரேமியா

மிஷனெரி டி.ஜெரேமியா அவர்கள் குடும்பமாக இப்பணிக்களத்தில் பல ஆண்டுகளாக பணி செய்து வருகிறார். இவரது அயராத உழைப்பால் ஒரு சில குடும்பங்கள் இயேசுவின் அன்பால் ஈர்க்கப்பட்டு சபைக்கு வருகிறார்கள். இவருக்கு மனைவி மற்றும் ஒரு மகன், ஒரு மகள் உள்ளனர். இவர்களுக்காகவும் இப்பணிக்களத்துக்காகவும், ஜெபித்துக்கொள்ளவும்.

மிஷனெரியின் மாத உதவி ரூ.3000/– க்காகவும் ஜெபித்துக்கொள்ளவும்

# முன்னேற்ற பணியாளர்கள் தேவை

மிஷன் பணிக்களங்களில் பணியாற்றும் மிஷனரிகளுக்கு **புதுநம்பிக்கை** மிஷன் பல்வேறு வகைகளில் உதவி செய்து வருகிறது. மிஷனரிகளுக்கு உதவி செய்யும் மிஷனரி பணியில் ஆர்வமுள்ள தன்னார்வ முன்னேற்ற பணியாளர்கள் தேவை. தாங்கள் வாழ்ந்து வரும் பகுதியிலேயே இப்பணிகளை செய்யலாம். மிஷனரி பணியில் ஆர்வமுள்ள கிறிஸ்தவ சகோதரர் / சகோதரிகள் இப்பணிகளை ஜெபத்துடன் செய்யலாம். (நேரில் வர விரும்புவோர் முன் நேரம் குறித்து வரவும்)


எமது அலுவலக முகவரி:

**புது நம்பிக்கை மிஷன்**

75/33, ஐசக் தெரு, நாகர்கோவில் - 629 001.

தொடர்பு எண் : 9442935233


## ஜெப மற்றும் குடும்ப ஆலோசனை

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!

உங்கள் ஜெபத்தேவைகள் மற்றும் குடும்பம், வேதாகமம் குறித்த ஆலோசனைகளுக்கு எங்களை தொடர்பு கொள்ளவும். ஜெபித்து ஆலோசனை கூறி உதவ ஆயத்தமாயிருக்கிறோம்.

**தொடர்பு எண் : 9442935233**



# கிறிஸ்துமஸ் – தேவன் மாம்சத்தில் வெளிப்படுதல்

பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய திரியேக தேவனுக்கு, இன்றும் என்றும் உள்ள சதாகாலங்களிலும் மகிமை உண்டாவதாக. வாசகர்களாகிய உங்களை மீண்டும் இந்த இதழின் மூலமாய் சந்திப்பதில் மகிழ்ச்சியடைகிறேன். நாம் கடந்த இதழில் இயேசுகிறிஸ்துவின் மூன்று அலுவல்களாகிய தீர்க்கதரிசி, ஆசாரியர், இராஜா என்பவைகளைப்பற்றி விரிவாக ஆராய்ந்தோம். இந்த இதழில் 1 தீமோ. 3:16–ன் ''தேவன் மாம்சத்தில வெளிப்பட்டார்'' என்கிற பதத்தை அடிப்படையாக வைத்து, குமாரனாகிய தேவன் எப்படி, ஏன் தன்னோடு மனித சரீரத்தை இணைத்துக் கொண்டார் என்று பார்க்க இருக்கிறோம்.

இயேசு கிறிஸ்து என்கிற நபர் வாழ்ந்தார் என்பதில் எந்த சந்தேகத்திற்கும் இடமில்லை. சரித்திரமே (கி.மு. – கி.பி.) அதற்கு சாட்சி. ஆனால் இயேசு கிறிஸ்து யார் என்பதே பலர் மத்தியில் காணப்படுகிற கேள்வியாய் காணப்படுகிறது. ஒரு கூட்டத்தார் இயேசுவை எல்லோரைப் போன்ற சாதாரண நபராய் பார்க்கின்றனர். இன்னும் ஓர் கூட்டத்தார் இயேசு கிறிஸ்துவை ஒரு மிகப்பெரிய தீர்க்கதரிசி என்று விசுவசிக்கின்றனர். இன்னும் பலர் ஒரு படி மேலே போய் இயேசுவை கடவுளின் பல அவதாரங்களில் ஒருவர் என நம்புகின்றனர். ஆனால் இயேசு கிறிஸ்துவைக் குறித்த சரியான விசுவாசமானது அவரே மனிதனாக வெளிப்பட்ட தேவன் என்பதே ஆகும்.

## 01. தேவத்துவத்தின் இரகசியம்:–

பைபிளில் இரகசியம் அல்லது மறைபொருள் என்பது புதிய ஏற்பாடு வரும் வரையிலும் வெளிப்படுத்தப்படாத ஒரு சத்தியமாகும். 1 தீமோ. 3:16ல் வெளிப்படுத்தப்பட்ட இரகசியமானது இயேசு கிறிஸ்து முழுமையான தேவன் மற்றும் முழுமையான மனிதன் என்பதே. இந்த வாக்கியம் ஆதி திருச்சபையிலே ஒரு பாடலாகவே அமைந்திருந்தது. இந்த வெளிப்படுத்தப்பட்ட இரகசியமானது ''யாவரும் ஒப்புக்கொள்ளுகிறபடியே மகா மேன்மையுள்ளது'' என பவுல் குறிப்பிடுகிறார். அதாவது இதிலே சந்தேகத்திற்கே இடமில்லை என்பதாகும். இந்த வாக்கியத்தில் ஆறு காரியங்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. ஆனால் ''தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டார்'' என்பதே இவ்விதழிலே நமது ஆய்வின் அடிப்படையாகும்.

## 02. மாம்சத்தில் வெளிப்பட்ட தேவன் – இயேசு கிறிஸ்து:–

பல இதிகாசங்கள், புராணங்களில் தேவர்கள் மனித உருவாக வந்ததாக கதைகள் உண்டு. ஆனால் அவைகள் வரலாற்று நிகழ்வுகள் அல்ல. இதிகாச கதைகளே ஆகும். வரலாற்றில் பல மனிதர்கள் தங்களை கடவுளாக சொல்லியிருக்கிறார்கள். இன்றும் சொல்லி வருகிறார்கள். ஆனால் அப்படிப்பட்டவர்களிடம் தேவனுக்கு மாத்திரம் இருக்கக்கூடிய எந்த தெய்வீக குணாதிசயங்களும் காணப்படாதபடியினால் அப்படிப்பட்ட யாவரின் கூற்றும் தவறாகிவிட்டது.

சரித்திரத்தில் வெளிப்பட்டவர்களில் தேவன் (God) என்ற தகுதியுடையவர் குமாரனாகிய இயேசுகிறிஸ்து மாத்திரமே. (யோ. 1:1,14) ஏனென்றால் இயேசு கிறிஸ்து மாத்திரமே தேவனும் மனிதனுமாக இருக்கிறார். (கொலோ. 2:9) சிலர் பிதா உலகத்திலே இயேசுவாக வந்தார் என கூறுகின்றனர். இது தவறாகும். இதற்கு காரணம் தேவத்துவத்தைக் குறித்த சரியான அறிவு இல்லாமையே ஆகும்.

தேவன் ஒருவரே (உபா.6:4) அவர் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவர் என்கிற மூன்று ஆள்தத்துவங்களாக சதா காலமும் செயலாற்றுகிறார். (மத். 28:19; 2 கொரி. 13:14; 1 பேது. 1:2). இதிலே திரியேக தேவனின் அநாதி திட்டத்தின்படி 2000 ஆண்டுகளுக்கு முன்பாக தேவத்துவத்தின் இரண்டாம் நபராகிய குமாரன், இயேசு என்கிற பெயரிலே தன்னோடு மனித சரீரத்தை இணைத்துக் கொண்டவராக மனிதனாக பிறந்தார். (1 யோ. 1:2; 1 யோ. 4:2; 2 யோ. 7) பிதாவோ, பரிசுத்த ஆவியானவரோ அப்படி வரவில்லை. ஆகவே இந்த வாக்கியத்தின்படி, ''மாம்சத்தில் வெளிப்பட்ட தேவன்'' என்பது இயேசு என்கிற பெயரிலே வெளிப்பட்ட குமாரனாகிய தேவனுக்கே உரியதாகும்.

## 03. இயேசு கிறிஸ்துவின் மாமிச வெளிப்பாடு மற்றும் இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பு என்பவைகளின் ஒற்றுமை வேற்றுமை:–

பொதுவாக தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டார் என்பது இயேசு கிறிஸ்துவின் கன்னிப் பிறப்பே என பலர் நினைக்கின்றனர். இரண்டு காரியங்களும் ஒற்றுமையாக இருந்தாலும் அதிலுள்ள வேற்றுமையையும் நாம் அறிய வேண்டும். இயேசு கிறிஸ்துவின் மாமிச வெளிப்பாடு (Incarnation) என்பது குமாரன் நம் மீட்புக்காய் தன் தெய்வீகத்தோடு மனித சரீரத்தை மனுஷீக குணாதிசயங்களை இணைத்துக் கொண்டதை பற்றியதாகும். கன்னிப்பிறப்பு என்பது மேல் சொல்லியவற்றை நிறைவேற்றின முறை ஆகும். இதிலே இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பு முக்கிமானதாகும். ஏனென்றால் பரிசுத்த ஆவியானவரின் மூலமாக புருஷ சித்தமில்லாமல் இயேசுவின் கன்னிப்பிறப்பு அமைந்ததினாலே ஆதாமின் வழி வந்த ஜென்ம பாவம் அவரை தொடவில்லை. மட்டுமல்ல அவரது தெய்வீக தன்மைகள் மறைந்து போகாமல் மனுஷீகம் இணைந்தவராக அவர் வெளிப்பட்டார்.

## 04. இயேசு கிறிஸ்துவின் இரண்டு தன்மைகள்:–

குமாரனாகிய தேவனின் மாமிச வெளிப்பாட்டிற்குப்பின் அவரிடம் தெய்வீக தன்மையோடு மனுஷீக தன்மையும் காணப்படுகிறது. ''கொலோ.2:9) இயேசு மனிதனாக வந்தபோது அவரின் தெய்வீக தன்மையோடு மனுஷீகத்தையும் இணைத்துக்கொண்டார். என்றென்றும் அப்படியே இருப்பார். (எபி. 13:8) இதை பைபிள் பண்டிதர்கள் ஹைப்போஸ்டேட்டிக் யூனியன் (Hypostatic Union ) என்று கூறுகின்றனர்.

**இயேசுவின் தெய்வீகத்திற்கான ஆதார வசனங்கள்**

யோ. 1:1; யோ. 10:30; யோ. 8:24; பிலி. 2:6; ரோ. 9:5

**இயேசுவின் மனுஷீகத்திற்கான ஆதார வசனங்கள்**

கலா. 4:5; மத்.1:18–20; 1 தீமோ. 2:6

இந்நிகழ்வை அப். பவுல் பிலி. 2:6–11ல் அழகாக குறிப்பிடுகிறார்.

பிலி. 2:6 : பிதாவுக்கு சமமானவர் (தெய்வீகம்)

பிலி. 2:7 : வெறுமையாக்கி – தனது தெய்வீகத்தோடு மனுஷீகத்தை இணைத்துக்கொள்ளுதல் (தெய்வீகமும் மனுஷீகமும்) அடிமையின் ரூபம்–வேலைக்காரன் (33 ஆண்டுகள் மட்டும்)

பிலி. 2:8 : தாழ்த்தி – சிலுவை மரணம் (மனுஷீகம்)

பிலி. 2:9–11 : இயேசு கிறிஸ்துவின் தற்போதைய நிலை

– இதிலே இயேசு கிறிஸ்து நமக்காக நிறைவேற்றின அடிமையின் ஊழியம் 33 ஆண்டுகள் மட்டுமே. ஆனால் உயிர்த்தெழுந்த பிறகு அவர் மனுஷ சரீரம் (மறுரூப சரீரம்) உடையவராக காணப்படுகிறார்.

## 05. குமாரனாகிய தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டதன் நோக்கம்:–

காலஞ்சென்ற பைபிள் பண்டிதர் லீமென் ஸ்ட்ராஸ் ''ஏன் குமாரனாகிய தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டார்'' என்பதற்கான ஏழு காரணங்களைக் குறிப்பிடுகிறார்.

1. தேவனை மனிதனுக்கு வெளிப்படுத்த வந்தார்.
   ரோ. 1:19,20; சங்.19:1–16; மத். 11:27; யோ.14:8,9; யோ.1:1,8,9; 1 பே.2:23.
2. மனிதனுக்கு தனது நிலையை காண்பிக்க வந்தார்.
   ஆதி.1:27;2:7,17; ஆதி. 3; எபே.2:1; ரோ.5:12; யோ.15:24; யோ.8:12; யோ.1:11.
3. மனிதனை மீட்க வந்தார்
   கலா.4:4,5; ஆதி.3:15; ஏசா.53; மத். 1:21; லூக். 2:11; லூக்.19:10.
4. சாத்தானின் கிரியைகளை அழிக்க வந்தார்
   எபி.2:9,14–15; யோ.8:44; ஆதி.2&3; ஆதி. 3:15; 1கொரி. 15:54–57; 2தீமொ.2:9,10; வெளி. 1:18; யோ.16:11.

5. முழு சிருஷ்டியையும் மீட்க வந்தார்
யோ.1:3; கொலோ.1:28; ஏசா.11:6–9, 9:6; ஓசியா 2:8; எபே.1:10; கொலோ.1:20; ரோ.8:19–23; எபி.2:5–9
6. இஸ்ரவேலை இரட்சிக்க வந்தார்
ரோ.3:2; ரோ. 9:24; ஆதி. 12:1; யோ. 1:11,14; லூக். 19:14; அப். 15:14; மத்.21:43; ரோ.9–11; ஏசா. 12:1–6; யோவேல் 2:26,27; ஏசா.9:6,7.
7. ஆளுகை செய்ய வந்தார்
மத்.2:1,2; சகரி.9:9; சங்.2:6; பிலி. 2:5–11; மத். 25:31; வெளி. 1:7; 1கொரி.15:28; லூக். 1:31–33.

**06. மாம்சத்தில் வந்த இயேசுவை அறிக்கை பண்ணாதவர்கள்:–**

1 யோவான் 4:1–3ன் படி மாம்சத்தில் வந்த இயேசு கிறிஸ்துவை அறிக்கை பண்ணாதவர்கள், அதாவது இயேசுவை மாம்சத்தில் வெளிப்பட்ட தேவன் என்று அறிக்கை பண்ணி ஏற்றுக் கொள்ளாதவர்கள் தேவனாலே மறுபடியும் பிறவாதவர்கள் என பைபிள் கூறுகிறது. அவர்கள் அந்தி கிறிஸ்துவின் ஆவியை உடையவர்களாயிருக்கிறார்கள். அவர்களுக்கு இரட்சிப்பில்லை. அப்படிப்பட்டவர்கள் அந்தி கிறிஸ்து அடைகிற ஆக்கினையிலே பங்கடைவார்கள். (வெளி. 19:20; 20:10–15)

நம்மை அவரைப்போல மாற்றும்படிக்கு (1யோ.3:2) நம்மைப்போல மாறின இயேசுவை (எபி.2:14,15) துதிப்போம், போற்றுவோம், புகழுவோம், பறைசாற்றுவோம். மாரநாதா.

**– S. மோசஸ் ராஜ்**

---

## நன்கொடை அனுப்புவோர் கவனத்திற்கு

நன்கொடை மற்றும் காணிக்கை அனுப்புவோரும், வங்கியில் காணிக்கை செலுத்துவோரும் தயவு செய்து தங்கள் பெயர் மற்றும் முழு முகவரியை எமக்கு தெரிவிக்கவும். உரிய ரசீது கொடுக்க அது உதவிகரமாக அமையும். தங்கள் உதவிக்கும் ஒத்துழைப்புக்கும் நன்றி.

**பெயர் :** Newhope Mission (நியூஹோப் மிஷன்)
**எமது வங்கி கணக்கு எண் : 254901000557777**
**வங்கி : இந்தியன் ஓவர்சீஸ் வங்கி** (IOB)
**கிளை : மிடாலக்காடு** (Midalakkadu)
IFSC Code : IOBA 000 2549

நமது மிஷன் பணிக்களங்களை நேரில் பார்வையிட்டு ஜெபிக்க உங்களை அன்புடன் அழைக்கிறோம்.
தொடர்பு எண் : **9443155120 & 9442935233**

# அமிர்த பானம் !

அண்ணே ! எனது தன்னம்பிக்கை வளர உதவும் ஊட்டச்சத்து தரும் ‘கிருபை’ குறித்து சொல்கிறேன் என்றீர்கள். ஞாபகம் இருக்கிறதா ?

ஆம் தம்பி ! நன்றாக நினைவு இருக்கிறது ! அத்தனை சீக்கிரத்தில் மறந்து விடுவேனா ? கேள் !

மனிதனுக்கு தன்னம்பிக்கை வளர்க்கும் இறைநம்பிக்கை உருவாக செய்வது விசுவாசம். அந்த விசுவாசம் வளர சரியான ஊட்டச்சத்து தேவ கிருபை மட்டுமே. அந்த கிருபை எங்கே கிடைக்கும் ? கிருபை என்னும் அந்த அமிர்த பானத்தை எப்படி பருகுவது ? இவைகள் தான் உன் கேள்வி, சரிதானே ?

ஆம் அண்ணே !

கிருபை எங்கே கிடைக்கும் ? அது இயேசு கிறிஸ்துவில் மட்டுமே கிடைக்கும் என்பதே பதில். “... கிருபையும் சத்தியமும் இயேசு கிறிஸ்துவின் மூலமாய் உண்டாயின.

அவருடைய பரிபூரணத்தினால் நாம் எல்லாரும் கிருபையின்மேல் கிருபை பெற்றோம்” யோவான் 1:16,17 வசனங்களை படித்துப்பார்.

நிச்சயமாக படித்துப்பார்க்கிறேன் அண்ணே !

தம்பி இந்த வசனங்களை மட்டும் படிப்பதுடன் நிறுத்தி விடாதே ! தினமும் பரிசுத்த வேதாகமத்தை வாசித்து, தியானிக்க வேண்டும்.

எனென்றால் கிருபை என்னும் ஊட்டச்சத்து இயேசு கிறிஸ்துவில் கிடைக்கிறது. அந்த பரலோக ‘அமிர்த பானம்’ என்னும் கிருபையை வேதாகம வசனங்கள் மூலம் மட்டுமே பருக முடியும். சங்கீதம் 19:10—ஆம் வசனம், தேவனுடைய வார்த்தையை தேனிலும் தேன் கூட்டிலிருந்து ஒழுகும் தெளிதேனிலும் மதுரமுள்ளதுமாய் இருக்கிறது என கூறுகிறது.

தேன் ஒரு அருமருந்தல்லவா ! எல்லா வயதினரும் பருகலாம். அதுபோலவே வேத வசனமும் அனைவரும் பருகக்கூடிய ஒரு அமிர்த பானம் !

தேனை நினைத்தாலே நாவில் நீர் சுரக்கிறது அண்ணே !

வேத வசனமும் உன் இருதயத்தில் தன்னம்பிக்கை சுரந்து பெருக செய்யும் ! தம்பி இன்னொரு முறையிலும் வசனம் ஒப்பிடப்பட்டுள்ளது. அதையும் சொல்லட்டுமா ?

சொல்லுங்கண்ணே !

பேதுருவின் முதலாம் நிருபம் 2:2—ஐ படி. “நீங்கள் வளரும்படி புதிதாய் பிறந்த குழந்தைகளைப்போல, திருவசனமாகிய களங்கமில்லாத ஞானப்பாலின்மேல் வாஞ்சையாயிருங்கள்”

சரியாக படித்தாய் ! நீயும் தன்னம்பிக்கையுள்ளவனாக வளர திருவசனமாகிய களங்கமில்லாத ஞானப்பால் மீது வாஞ்சையாயிருக்க வேண்டும்.

தாய்ப்பால் மட்டுமே அனைத்து சத்தும் அடங்கிய உன்னத பானம்! அது போலவே வசனம் என்னும் களங்கமில்லாத ஞானப்பாலும் 'கிருபை' என்னும் ஊட்டச்சத்து மற்றும் உயிர்ச்சத்து கொண்டது. ஆகவே தினமும் பைபிளை வாசிக்க வேண்டும். தியானிக்க வேண்டும்.

அண்ணே! என் தன்னம்பிக்கை வளர நல்ல ஊட்டச்சத்தான 'கிருபை' தரும் பானம் 'வேத வசனம்' மட்டுமே என விளக்கியதற்கு ரொம்ப நன்றி!

தம்பி! பைபிளை தினமும் படிக்க மறக்கமாட்டாயே!

நிச்சயமாக மறக்க மாட்டேன்! அண்ணே! ஒரு கேள்வி கேட்கலாமா?

நிச்சயமாக! கேள் தம்பி!

இரட்சிப்பு என்றால் என்ன அண்ணே! சிலர் என்னை குழப்புகிறார்கள்.

மிக நல்ல கேள்வி! சொல்கிறேன் கேள்! முதலில் யோவான் 1:12–ஐ கவனமாக படித்து தியானி! அப்புறம் சொல்கிறேன்.

(தொடரும்)

– எச்.ஆர்.கே

---

## மருத்துவ குறிப்பு – ஆரஞ்சு பழம்



மலை பிராந்தியங்களில் அதிகம் ஆரஞ்சு விளைகிறது. இது சிறந்த மருத்துவ குணம் உடையது. நமது உடலில் உள்ள இரத்தத்தில் நன்மை தரும் கொலஸ்டிரால் அதிகரிக்க வேண்டுமெனில் தினமும் ஆரஞ்சு பழச்சாறு அருந்த வேண்டும். இவ்வாறு தொடர்ந்து செய்து வந்தால் உடலில் நல்ல கொலஸ்டிரால் 20–27 சதவீதம் வரை அதிகரிக்க வாய்ப்புள்ளது.

---

## புதுநம்பிக்கை இளைஞர் ஜெப ஐக்கியம்

புது நம்பிக்கை ஜெப ஐக்கியம் சார்பாக கல்லூரி மாணவர்களுக்கான ஜெபம் 17–9–2017 அன்று ஈரோடு மாவட்டத்தில், சித்தோடு சபையில் (போதகர் Rev. K.S. கந்தசாமி) நடைபெற்றது. சகோ. கண்ணன் அவர்கள் இதனை பொறுப்பெடுத்து நடத்தினார்கள்.

இந்திய இளைஞர்களுக்காகவும், மாணவர்களுக்காகவும், ஜெபிக்க விரும்புவோர் இந்த ஜெப குழுக்களை தங்கள்பகுதியில் அமைத்து ஜெபிக்க அன்புடன் அழைக்கிறோம்.

---

ஏப்ரல் – ஜூன் இதழ் போட்டிக்கான சரியான விடை எழுதியவர்கள்

**1. Mrs. சாந்தி சாலோமோன், 2. Mrs. செல்வி செல்வராஜ், 3. Mrs. பிரியா பாபு,**

**4. Mrs. ஸ்டெல்லா அலெக்ஸ், 5. Mrs. ஸ்டெல்லா ஜெயபால், 6. Mrs. சுனி மேரி,**

**7. Mrs. பொன்னேசம் ராஜா, 8. Mrs. சந்திரமதி ராஜா, 9. Mrs. லின்சி யூஜின்,**

**10. Mrs. ஷீபா மோகன், 11. Mrs. பமிலா எட்வின்.**

# இயேசுவின் தாயாகிய மரியாள்

தனித்துவமான, வேதனையுள்ள சிறப்பான பணியை நிறைவேற்றவே மரியாள் தேவனால் அழைப்பு பெற்றாள். ஆலய பணிவிடை செய்து வந்தாள். வாலிப நாட்களில் தூய்மையுடன் தன்னை காத்துக்கொண்டாள். எளிமை, முன்மாதிரி, கடவுளுக்கு பயப்படுதல், ஆணவமில்லாது அடக்கமாக வாழ்ந்தவள். ஏழை மரியாளை தேவ கண்கள் கண்டன. இறைவனின் திருவுளம் தன்னில் நிறைவேற தன்னையே கையளித்தாள். மரியாள் இது எப்படி ஆகும் என கேட்டபோது அவளின் சந்தேகத்தை போக்க பிள்ளை பேறின்றி இருந்த எலிசபெத்துக்கு பிள்ளை கொடுக்க முடியுமானால் ஒரு கன்னிகைக்கு அவரால் பிள்ளை தர முடியும் என தெரியப்படுத்தினார். தைரியம் பெற்ற மரியாள் சமூக வெட்கங்களையோ, தனது பாதுகாப்பையோ, நினையாது தேவனால் கூடும் என விசுவாசத்துடன் தன்னை அர்ப்பணித்தாள். ஆண்டவருக்கு அடிமை என அறிக்கையிட்டு தன்னை தாழ்த்தியபோதே தனை வென்றாள். தன்னை தேவனிடம் அர்ப்பணித்த உத்தமியாக இருந்தபடியினால் யோசேப்பு சந்தேகப்பட்டபோது தேவன் சொப்பனத்தில் சரி செய்கிறார். (சங்.37:18) சரி செய்யப்பட்ட யோசேப்பு மரியாளை ஏற்றுக்கொண்டு உறுதுணையாக செயல்பட்டார். யூத ஸ்திரீகள் மேசியா என்னிடத்தல் பிறப்பார் என காத்துக்கொண்டிருக்க மரியாளிடத்திலிருந்து மேசியா பிறந்தார். நமது தாய்மார்கள் தங்கள் பிள்ளைகளை தங்களுடைய வட்டத்துக்குள்ளேயே வாழ வைப்பார்கள். ஆனால் மரியாள் தன் பிள்ளைகளை அதிலும் குறிப்பாக இயேசுவை சிறுவயது முதலே மக்களுக்காகவே அர்ப்பணித்தாள். இயேசு மனுக்குல மீட்புக்காக சிலுவை மரணத்தை சந்தித்து மரிப்பார் என்று தெரிந்திருந்தும் அனுப்பினாள். தனது கணவர் யோசேப்புக்கு ஏற்ற துணையாக இருந்து இல்லறம் நடத்தினாள். பிள்ளைகளுக்கு சிறந்த தாயாக வாழ்ந்தார். தன்னுடைய மகன்கள் அனைவரையும் கடவுளுக்காக பலி கொடுத்தபோதும் இறுதிவரை கடவுள்மீது நம்பிக்கையை வெளிப்படுத்தி வாழ்ந்தாள். தாய்மை பண்புக்கு மரியாள் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. எலிசபெத்தை தேடிச்சென்று பணிவிடைச் செய்தது இரக்க குணத்தை வெளிப்படுத்துகிறது. தன்னலமற்ற அன்பு செயல் மரியாளிடம் இருந்தது. மரியாளின் வாழ்வில் அனேக துன்பங்கள் நேரிட்டன. யோசேப்பின் இறப்பு, ஏனைய பிள்ளைகளின் பராமரிப்பின்மை காணப்பட்டன. யோசேப்பு இறந்த பிற்பாடு இயேசு தச்சு

வேலை செய்தார். சுவிசேஷ பணி தொடங்கிய பின்பு தச்சு வேலை செய்யவில்லை. ஆகவேதான் இயேசு சிலுவை மரணத்தின்போது தாயை பராமரிக்க யோவானை கொடுத்தார்.

இயேசுவின் பிறப்பு, வளர்ச்சி, பணி, இறப்பு ஆகிய அனைத்தையும் மரியாள் நேரடியாக பார்த்து சிறப்பிடம் பெற்றாள். யூதர்கள் பெண்களை அடிமைகளாக வைத்திருந்தனர். யூதர்கள் பெண்களை இரண்டாம் தர குடிமக்களாய் நடத்துவார்கள். யூத ரபீ பொதுமக்கள் மத்தியில் தன் மனைவியோடு பேசமாட்டார்கள். யூத சமுதாயத்தினரால் பெண்கள் தாழ்த்தப்பட்டவர்களாக கருதப்பட்டனர். ஆயினும் மரியாளை தேவன் தெரிந்தெடுத்து அடிமைதனத்தை மாற்றி பெண் இனம் சமுதாயத்தில் முக்கிமானவர்கள் என காட்டினார். மரியாள் கர்ப்பவதியாகி இயேசுவை பெற்றெடுத்தது அதிசயம், அற்புதம். அதே வேளையில் நிந்தை, அவமானம், இன்னல், ஏளனமான பேச்சு உள்ளத்தை உடைத்தன. இதனைக் கண்ட கடவுள் மரியாளை களிப்பாக மாற்றினார். இயேசுவே இரட்சகர் என போற்றி மகிழ்ந்தாள். நாமும் இயேசுவை இரட்சகராக நம்பிக்கையோடு ஏற்று மகிழ்வோம். கிறிஸ்து பிறப்பு நாட்கள், பண்டிகை காலங்கள் மகிழ்ச்சியாய் ஆசரிப்போம். உயர்வை தந்த இயேசுவை போற்றுவோம்.

– **Mrs. S.P. செல்வி,** பெரும்புழி

---

# பணிக்கள சந்திப்பு

நமது மிஷனெரி பணிக்களங்களில் நடைபெறும் பணிகளை நேரடியாக பார்வையிட்டு அங்கு பணிபுரியும் மிஷன் பணியாளர்கள் மற்றும் அவர்கள் குடும்பத்தினரை சந்திக்கவும் விருப்பமுடையவர்களாய் இருக்கிறீர்களா ? அப்படியானால் உங்கள் விருப்பத்திற்கு உறுதுணையாக நாங்கள் இருக்கின்றோம். நமது குழுவினர் வடஇந்திய மிஷனெரி பணிகளை பார்வையிட செல்லும்போது நீங்களும் எங்களுடன் இணைந்து கொள்ளலாம். உங்கள் வருகை வட இந்தியாவில் உள்ள புதிய கிறிஸ்தவ நண்பர்கள் யாவரையும் உற்சாகப்படுத்துவதாக அமையும். பணிக்களங்களை நேரில் சந்திக்க விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

**குறிப்பு:**

ஆயுள்சந்தா ரூ.2000/– செலுத்துபவர்களுக்கு புது நம்பிக்கை வெளியீடுகள் அனைத்தும் இலவசமாக அனுப்பித் தரப்படும்.

"இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் ...." (1 தெச.5:17)

# ஜெப விண்ணப்ப குறிப்புகள்

☞ தெலுங்கானா மாநிலத்தில் நடைபெற்றுவரும் படக்காட்சி மற்றும் கிராம ஊழியங்களுக்காக ஜெபிப்போம்

☞ மத்திய பிரதேச மாநிலத்தில் கட்ட திட்டமிடப்பட்டுள்ள சபை கட்டிட பணிக்கான தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்.

☞ வருகிற புத்தாண்டு 2018–ல் இந்தியாவில் சுவிசேஷ பணிகள் மூலம் இந்தியா வல்லரசாவதை நோக்கி வளர ஜெபிப்போம்.

☞ ஜம்மு காஷ்மீர் மாநிலத்தில் சபைகள் எழும்பும்படியாக ஜெபிப்போம்.

☞ பீகார் மாநிலத்தில் சகோதரர் வினோத் மூலம் நடைபெற்று வரும் கிராம சுவிசேச குழுக்களுக்கான தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்.

☞ சகோரார் ரமேஷ் அவர்களுக்கு தொழில் செய்த இடத்தில் கிடைக்க வேண்டிய ஊதியம் தடைகள் நீங்கி கிடைக்க ஜெபிப்போம்.

---

# வேதாகம வினா – விடை போட்டி

வேதாகம பகுதி : **– தானியேல், ஓசியா**

1. ராஜாவின் சேவைக்காரன் பெயர் என்ன ?
2. தானியேல் புத்தகத்தில் எத்தனை முறை நேபுகாத் நேச்சார் என கூறப்பட்டுள்ளது ?
3. பரிசுத்த தேவர்களின் ஆவி உடையவர்கள் யார் ?
4. தரியு ராஜா ஜனங்களெல்லாருக்கும் எழுதினது என்ன ?
5. இருதயத்தை மயக்குவது எது ?
6. நம்பிக்கையின் வாசல் எது ?
7. உடன்படிக்கையை மீறினது யார் ?
8 அப்பஞ்சுடுகிறவன் என்ற வார்த்தை எந்த வசனத்தில் உள்ளது ?
9. நியாயத்தீர்ப்பு எப்படி முளைக்கும் ?
10. தட்டானுடைய வேலை என்ன ? வசனத்தை குறிப்பிடவும்

விடைகளை அனுப்ப வேண்டிய முகவரி
**S. Vasantha Nesam,** 23- Eastaff Street, Nagercoil - 629 001
Cell : 9789183072

விடைகள் வந்துசேர வேண்டிய கடைசி நாள் : **டிசம்பர் 15, 2017**

ஜூலை – செப்டம்பர் இதழ் போட்டிக்கான சரியான விடை எழுதியவர்கள்

**1. Mrs. சாந்தி சாலோமோன், 2. Mrs. செல்வி செல்வராஜ், 3. Mrs. பிரியா பாபு,**
**4. Mrs. ஸ்டெல்லா அலெக்ஸ், 5. Mrs. ஸ்டெல்லா ஜெயபால், 6. Mrs. சுனி மேரி,**
**7. Mrs. பொன்னேசம் ராஜா, 8. Mrs. சந்திரமதி ராஜா, 9. Mrs. லின்சி யூஜின்,**
**10. Mrs. ஷீபா மோகன், 11. Mrs. பமிலா எட்வின்,12. Mrs. பேபி கிறிஸ்டோபர்,**
**13. Mrs. அபிஷா, 14. Mrs. லலிதா ஜாஸ்பர், 15. மாஸ்டர். ரினில்.**

# பாடல் புத்தகம் – வெளியீடு

சபை ஆராதனை, வீட்டு ஜெபக்கூட்டம், தனி ஜெபத்தில் தேவனை பாடி துதிக்க பக்தி பரவசம், இனிமையான பாடல்களின் தொகுப்பு. 500–க்கும் மேற்பட்ட பழைய, புதிய பாடல்கள் மலையாள, ஆங்கில பாடல்களும் உண்டு. பாடல் புத்தகத்தின் விலை ரூ. 70/–

**எமது இதர வெளியீடுகள்**

யூத பண்பாடும் வசன விளக்கமும் – ரூ. 30/–
சபை உடைதலை தடுக்கும் வழிகள் – ரூ. 120/–
சபை நிதி பெருகும் வழிகள் – ரூ. 70/–




குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்
தொடர்பு எண்: 9442935233




## புது நம்பிக்கை வெளியீடுகள்

வேதாகமத்தின் ஆழமான சத்தியங்களை புரிந்து கொள்ள "யூத பண்பாடும் வசன விளக்கமும்" என்னும் நூல் வெளியிடப்பட்டுள்ளது. வேத வசனங்களில் வரலாற்று மற்றும் கலாச்சார பின்னணியில் வசனங்களை புரிந்து கொள்ளவும் ஆவிக்குரிய முறையில் விசுவாசிகள் வளரவும் பயனுள்ள விளக்கங்கள் இப்புத்தகத்தில் உள்ளன. அனைத்து கிறிஸ்தவர்களும் படிக்க வேண்டிய புத்தகம். வேதாகம பள்ளி மாணவர்கள் மற்றும் ஆசிரியர்களுக்கு பரிசளிக்க தகுந்த சிறந்த புத்தகம்.

குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்
தொடர்பு எண்: 9442935233

## இறையியல் பயிற்சி பெறும் போதகர் அனிஷ் அவர்களை புதுநம்பிக்கை மிஷன் வாழ்த்துகிறது





ஆந்திரா மாநில மிஷனெரி பணிக்கள சந்திப்பு
சபை கட்டப்பட வேண்டிய மிஷனரி பணிக்களம்

எமது ஊழியங்களுக்கு ஜெபித்து நன்கொடை வழங்கி உதவி செய்த வாசகர் குடும்பங்கள், சபைகள் மற்றும் நண்பர்கள் அனைவருக்கும் புதுநம்பிக்கை மிஷன் நிர்வாகிகள், பணியாளர்கள் மற்றும் புதுநம்பிக்கை பத்திரிகை ஆசிரியர் குழு சார்பாக எமது இதயம் நிறைந்த கிறிஸ்மஸ் வாழ்த்துக்கள். கர்த்தர்தாமே சமாதானம் அருளி உங்களை காக்கக்கடவர்.

MERRY CHRISTMAS

– ஆசிரியர், புதுநம்பிக்கை.








Editor : S. Moses Raj, (Mobile : 7502071054),
Published by : New Hope Mission,
75/33, Isaac St. Nagercoil - 629 001.
Contact : 9442935233
e-mail: newhopebharat@gmail.com
website : www.newhopebharat.org
Printed at : Latha Press, 9791659601
For Private Circulation Only